Regd. No. 2975


ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 292, 293

## SRI-RAMANUJAN

Editor:—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.



வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



10—2—1973ல் வெளியிடப்பட்டது.

நமது க்ரந்தமாலா ஆபீஸில் கிடைக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் மிக முக்கியமா...

# புத்தகங்களின் பட்டியல்

(தமிழ், ஸம்ஸ்க்ருத, தெலுங்கு, ஹிந்தீ, ஆங்கிலப் பதிப்புக்கள்)

ரூ. பை

திவ்வியப் பிரபந்தம் மூலம்

நாலாயிர திவ்வியப் பிரபந்தம் 14—00
ஷை. தெ. லிபியில் 12—00
நித்தியாநுஸந்தானம் 2—50
அத்யாபகஹஸ்த பூஷணம் (நாலாயிரம் முன்னடி பின்னடி) 1—00
திவ்வியப்பிரபந்தக் கண்ணாடி (நாலாயிரம் பாசுரங்களுக்கும் அடைவும், அகராதியும்) 1—00

திவ்வியப்பிரபந்த வியாக்கியானம்

(பூர்வாசார்யர்கள் அருளியவை)

பெரியாழ்வார் திருமொழி மணவாளமாமுனிகள் வியாக்கியானம் 10—00
திருப்பாவை—மூவாயிரப்படி, ஆறாயிரப்படி 5—00
திருநெடுந்தாண்டகம்—பெரிய வாச்சான்பிள்ளை வியா. 4—00
பகவத் விஷயம், ஈடு முப்பத்தாறாயிரப்படி 2 ஸம்புடங்கள் (அச்சில் உளது)
ஷை தெலுங்கு லிபியில் 25—00
பெரிய திருமொழி—பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் (1-7 பத்துக்கள்—தெலு. லிபி) 10—00

திவ்வியப்பிரபந்த வியாக்கியானம்—திவ்யார்த்த தீபிகை (P.B.A.)

முதலாயிரம்

திருப்பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும் 8—00
திருப்பாவை 2—50
திருப்பாவை நறுமணம் 4—00
நாச்சியார் திருமொழி 2—00
பெருமாள் திருமொழி 2—00
திருச்சந்த விருத்தம் 3—00
திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு 3—00
பெரியதிருமொழி 1 முதல் 11 பத்துக்கள் 26—50
திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் 2—00
இயற்பா—4 திருவந்தாதிகள் 6—00

ரூ. பை

திருவிருத்தம் (பழைய விரிவான பதிப்பு) 4—00
திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழுகூற்றிருக்கை, சிறிய-பெரிய திருமடல்கள் இராமாநுச நூற்றந்தாதி. 7—00
திருவாய்மொழி தீபிகை உரை 1-10 பத்துக்கள் 30—00
நித்யாநுஸந்தானவுரை (தெ-டீகை) 10—00
உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம்-உரையுடன் 3—00
ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை—உரையுடன் 1—00

பொழிப்புரை

திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி 3—50
திருச்சந்தவிருத்தம் முதல் கண்ணிநுண் சிறுத்தாம்பு முடிய 3—50
பெரியதிருமொழி 1-4 பத்துக்கள் 3—50
திருவாய்மொழி ,, ,, 3—50
(நாலாயிர வ்யாக்யானத்தில் பல பகுதிகள் ஸம்ஸ்க்ருதம், ஹிந்தீ, தெலுங்கு பாஷைகளிலும் அச்சிடப்பட்டிருக்கின்றன.)
ஸ்ரீபட்டநாத ஸூக்த ஸர்வஸ்வம், பெரியாழ்வார் திருமொழியில் ஒவ்வொரு பதிகத்தின் ஸாரார்த்தமும் சுருக்கமாக விளக்கப்பட்டிருக்கிறது, வடமொழி—தெலுங்கு லிபி 1—50
ஷை நாகரி லிபி 3—00
ஸ்ரீகோதாஸூக்த ஸர்வஸ்வம்—அப்படியே நாச்சியார் திருமொழிக்கு 1—60

பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கு தமிழ் உரை

முகுந்தமாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம், சதுச்லோகீ 2—50
கத்யத்ரயம் 2—00
ஸ்ரீவைகுண்டஸ்தவம் 3—00

[அட்டையின் மூன்றாம் பக்கம் காண்க.

ஸ்ரீ ராமாநுஜன் - 292, 293



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 25 | பரிதாவிஞூ தை, மாசி 10—2—73ல் வெளியிடப்பீட்டது | ஸஞ்சிகை 4, 5

# ஸ்ரீ விஷ்ணுபுராணம்

(பத்ராதிபர்)

*வேதோகிலோ தர்மமூலம்* (வேதமே தர்மத்திற்கு மூலம்) என்றனர் மஹர்ஷிகள். *ஆதௌ வேதா: ப்ரமாணம்* (வேதங்களே பிரமாணங்களுள் முதன்மை பெற்றவை) என்று ஆசாரியர்களும் அருளிச்செய்தனர். சிக்கலான வேதங்களின் பொருள்களை விளக்குவதற்கென்றே தர்மசாஸ்த்ர புராணேதிஹாஸங்கள் தோன்றின. *பிபேத்யல்பச்ருதாத் வேத: மாமயம் ப்ரதரிஷ்யதி, இதிஹாஸ புராணுப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்* (அல்பச்ருதர்கள் வேதார்த்தத்தை கலக்கிவிடுவர்களென்று வேதமே நடுங்குகிறபடியால் இதிஹாஸபுராணங்களைக் கொண்டே வேதார்த்த மறுதியிடவேண்டும்) என்றும் பெரியோர் பணித்தார்கள். இதிஹாஸங்களில் ப்ரபலமான ஸ்ரீராமாயணம் கதை கூறுவதற்காகவே தோன்றியதென்று சிலர் நினைக்கலாம். ஆனுல், *வேதோபப்ருஹ்மணர்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:* (வால்மீகிமுனிவர் வேதார்த்தத்தை வியாக்யாநம் செய்வதற்கென்றே குசலவர்களுக்கு ஸ்ரீராமாயணத்தைக் கற்பித்தனர்) என்று அந்த ஸ்ரீராமாயணம் தன்னிலேயே சொல்லப்பட்டிருப்பதை யறிந்தவர்கள் அப்படி நினையார்கள்.

பொதுவாக தர்மசாஸ்திரங்களைக் காட்டிலும் புராணங்கள் ப்ரபலங்களென்றும், அவற்றிலும் இதிஹாஸங்கள் ப்ரபலமென்றும் வைதிகர்கள் சொல்லிப் போருவதுண்டு. ஆகிலும், வேதார்த்தங்களை விளக்கும் விஷயத்தில் ஸ்ரீவிஷ்ணு புராணம் மிகவும் சிறந்ததென்பது யாவருமிசைந்ததாகும். *வேதேஷு பௌருஷம்

ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம்." (வேதங்களில்புருஷஸூக்தமும், தர்மசாஸ்த்ரங்களில் மனுஸ்ம்ருதியும், மஹாபாரதத்தில் பகவத்கீதையும், புராணங்களில் ஸ்ரீ விஷ்ணுபுராணமும் மிகச் சிறந்தவை) என்று முன்னோர் கூறினர். இந்நான்கு க்ரந்தங்களும் நமது ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்தை திட்டவட்டமாக நிலைநாட்டித் தருமவையென்பதை நமது பெரியோர்கள் பலவிடங்களிலும் பேசியுள்ளார்கள்.

ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களின் கோஷ்டியில் மிகவும் சிறந்தவராகக் கொண்டாடப்படும் ஆளவந்தார், தாம் பணித்த ஸ்தோத்ரரத்னத்தில், *தத்வேந ய: சிதசிதீச்வர தத்ஸ்வபாவபோகாபவர்கததுபாயகதீருதார:, ஸந்தர்சயந் நிரமிமீத புராணரத்னம் தஸ்மை நமோ முனிவராய பராசராய*" (சித், அசித், ஈச்வரன் இவர்களின் ஸ்வரூபம், ஸ்வபாவம், போகங்கள், மோக்ஷம், இவற்றையடைவிக்கும் உபாயம், செல்லும் வழிகள் ஆகிய இவைகளையெல்லாம் உள்ளபடியே விளக்கி புராணரத்னத்தை நிருமித்த வள்ளல் பராசர மஹர்ஷியை வணங்குகின்றேன்.) என்று இம்மஹர்ஷிக்கு ஒரு தனியன் ஸாதித்தருளினர். இப்படி ஸ்ரீவிஷ்ணு புராணத்திற்கு புராணரத்னமென்று முதன்முதலாக பெயர் சூட்டினவர் ஆளவந்தாரே யாவர். உலகத்தோர் விரும்பும் நவரத்னங்கள் ஒருபுறமிருக்க, ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்கள் ஒப்புயர்வற்ற மூன்று ரத்னங்களையே விடாமல் அனுபவித்து வருகிறார்கள். மந்த்ரரத்னமென்கிற த்வயமந்த்ரமும், புராணரத்னமும், ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னமும் ஆகிய இம்மூன்றே அந்த சிறந்த ரத்னங்களாம். இப்படி ஆளவந்தார் தமது ஸ்தோத்ரத்தில் இப்புராணரத்னத்தை சிறப்பித்துக் கூறியிரா விட்டால், பிற்காலத்தில் இதற்கு இவ்வளவு மதிப்பு உண்டாயிராதென்பது திண்ணம்.

பிறகு எம்பெருமானாரும் தமது ஸ்ரீபாஷ்யத்தில் இப்புராணத்தின் பெருமையை நன்கு விளக்கியும் இதிலிருந்து பற்பல ச்லோகங்களை யெடுத்து விவரித்தும் இதை மிகவும் சிறப்பித்தருளினர். அவரது பரம்பரையில் சேர்ந்த மற்ற ஆசார்யர்களும் தமது க்ரந்தங்களில் இப்புராணத்தை வெகுவாகக் கையாண்டனர். மேலும், ஸகலசாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து வேதாந்தவித்யாநிதியென விளங்கினவரான (ஸ்ரீவிஷ்ணுசித்தாரென்று மறுபெயர் திருநாமம் வஹித்த) எங்களாழ்வான் என்கிற பேராசிரியர் இப்புராணத்திற்கு வெகு விரிவும் சுருக்கமும் இல்லாததொரு சிறந்த வியாக்கியானமெழுதி எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தில் இதை கொண்டாடினதையும் ஸார்த்தகமாக்கி வைத்தார். ஆசிரியரின் திருநாமத்தையிட்டு இவ் வியாக்கியானத்திற்கு ஸ்ரீ விஷ்ணுசித்தீயமென்றே பெயர் சூட்டலாயிற்று. இதன் பெருமையை இதை ஸேவித்தவர்கள் நன்கு அறிவார்களாகையால் நாம் இங்கு விவரிக்கத் தேவையில்லை. மூலக்ரந்தத்தில் விவரிக்கப்பட்ட பொருள்கள் இன்னவை யென்பதை ஆளவந்தார் தாமே நன்கு தெரிவித்துள்ளார். வேண்டிய அர்த்தங்களை விடாமலும், விரிவு வேண்டாத இடங்களைச் சுருக்கியும் வ்யாக்யானமருளிச் செய் திருக்குமழகு பேசத்தரமன்று.

ஸ்ருஷ்டி, ப்ரளயம், மந்வந்தரங்கள், மஹாபுருஷர்களின் வம்ச பரம்பரைகள், அவற்றைச் சேர்ந்த பல சரித்திரங்கள் ஆகியவிவையெல்லாம் இந்நூலில்

அழகாக விவரிக்கப்பட்டிருப்பதால் புராணலக்ஷணமும் இதில் நிரம்பியிருக்குமென்பதை அறியலாம். வ்யாஸமஹர்ஷியை கொண்டாடா நின்ற வேதாருஷ்ணும் (*ஸ ஹோவாச வ்யாஸ: பாராசர்ய:*) என்று அவரை பராசரர் புதல்வராக என்றே சொல்லுவதால் இப்பராசரமுனிவரின் பெருமையை நாம் ஒருவாறு அறியலாம். ஆளவந்தாரும் இவரை உதாரர் (வள்ளல்) என்று கூறினது வெறுமனன்று. வஸிஷ்டர், சக்தி, பராசரர், வ்யாஸர், சுகர் என்கிற வம்சபரம்பரையில் பராசரரே யன்றோ முதல் முதலில் புராணமியற்றியவர்.

இனி வ்யாக்யானகாரரான எங்களாழ்வானைப் பற்றியும் சிறிது தெரிவிப்போம். ஸ்ரீபாஷ்யத்திற்கு மிகச்சிறந்த வ்யாக்யானமென்று பேர் பெற்று விளங்கும் ச்ருதப்ரகாசிகையை இயற்றியவர் ஸ்ரீஸுதர்சனபட்டரென்னும் பேராசிரியர் ஆவர். அவருக்கு ஆசார்யராக வாய்த்தவர் வாத்ஸ்ய வரதாசார்யரென்று ப்ரஸித்தரான நடாதூர் அம்மாள் என்கிற மஹாசார்யர். இவர் தத்வஸாரம், சுலோகத்வயம், சுலோகத்ரயம், பரத்வாதி பஞ்சகஸ்துதி முதலிய பலநூல்களுக்கு ஆசிரியரும் ஆவர். இவர் திருவெள்ளறை என்கிற திவ்யதேசத்தில் எழுந்தருளியிருந்த எங்களாழ்வானை அடிபணிந்து, பல நாட்கள் பணிவிடைகள் செய்து அவர் பேரருளால் ஸ்ரீபாஷ்யார்த்தங்களைக் கற்றுணர்ந்தனர். இதன் அறிகுறியாக திருவெள்ளறையில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எங்களாழ்வான் திருவடிக்கீழ் இவ்வம்மாளும் நாளைக்கும் ஸேவை ஸாதித்தருளுகிறார்.

ஆழ்வார் கோஷ்டியுள் பெரியாழ்வார் மதுரகவிகள், தொண்டரடிப் பொடியாழ்வார் போலவும், ஆசார்ய கோஷ்டியில் உய்யக்கொண்டார், திருக்கோட்டியூர் நம்பி, பெரியவாச்சான்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை முதலியவர்களைப்போலவும் எங்களாழ்வானும் பூர்வசிகா ஸ்ரீவைஷ்ணவ வகுப்பைச் சேர்ந்தவராவர்.

சென்ற ஸாதாரண வருஷத்தில் நம் மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு விழா தேசமெங்கும் மிக்க உத்ஸாஹத்துடன் கொண்டாடப்பட்டவளவில் யாமும் எமது சக்திக்குத்தகுந்தபடி பற்பல பூர்வாசார்யக்ரந்தங்களை அச்சிட்டு வெளியிட ஸங்கல்பித்து அவ்வாறே செய்து வந்தோம், இன்னமும் செய்து வருகிறோம். அவ்வமயம் ஸ்ரீரங்கத்துக்கடுத்த புத்தூர் அக்ரஹாரத்தில் எழுந்தருளியிருக்கும், "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" ஆசிரியரான ஸ்ரீமான் உ. வே. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி விஷ்ணுசித்தீய வியாக்கியானத்துடன் கூடிய ஸ்ரீவிஷ்ணு புராணத்தை நாகரலிபியில் அச்சிட்டு வெளியிடவேணுமென்று எம்மை வெகுவாகத் தூண்டி, அதற்காக வேண்டிய மாத்ருகையையும் ஒரு பணமுடிப்பையும் தந்தார். பிறகு அவர் தூண்டுதலால் அவர் உறவினரான சென்னையில் வாழும் ஸ்ரீமான் ராமஸ்வாமி ஐயங்காரின் குமாரர் ப்ரபல வைத்யர் ஸ்ரீமான் ஸம்பத் என்பவரும் இக்கைங்கர்யத்தில் மிகவும் அக்கறையெடுத்துக்கொண்டு ஏறக்குறைய 3000 ரூபாய் பண உதவிசெய்து நம்மை மிகவும் உத்ஸாஹப்படுத்தினர். இதன் பயனாகவே இப்பெரிய புஸ்தகம் நம்மால் அச்சிடவிக்கப் பெற்று ஐப்பசித் திருமூலத்தன்று ஸித்தப்படுத்தப்பட்டு சென்ற கார்த்திகைத் திங்களில் ஸ்ரீரங்கத்தில் வெளியிடப்பட்டது.



ஸ்ரீவிஷ்ணுசித்தீயம் ஸ்ரீதரீயம் என்கிற இரண்டு வியாக்யானங்களுடன்கூடிய ஸ்ரீவிஷ்ணு புராணம் ஏற்கெனவே தெலுங்கு, தேவநாகரம், மற்றும் க்ரந்தலிபிகளில் அச்சிடவிக்கப்பட்டிருந்தும் அவையொன்றும் தற்சமயம் அடியோடு கிடைக்கவில்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிகவும் ஆதரணீயமான ஸ்ரீவிஷ்ணு சித்தீயத்துடன் கூடிய இப்புராணரத்னத்தை பதிப்பிக்க உதவிய மேற்படி டாக்டர் ஸம்பத் ஸ்வாமிக்கும், அவர் திருத்தகப்பனருக்கும் ஸ்ரீவைஷ்ணவவுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. அவ்விருவருடைய உருவப்படமும் இங்கே திகழ்கின்றது. நமது டாக்டர் ஸ்வாமியின் விசால ஹ்ருதயத்தினால் நமது ஸம்பிரதாயத்திற்கு ஏற்பட்டுள்ள நன்மைகள் அடுத்த இதழில் விளக்கமுறும். அடுத்த இதழ் 10-4-73ல் வெளிவரவேண்டியதாயினும் சிறிது முன்னாடியே வெளிவரும்.

---

# எழுதாதிருப்பது நலமன்றென்று கொண்டெழுதுகின்றேன்

ஸ்ரீ D. T. தாதாசார்ய ரென்று ப்ரஸித்தராயிருந்த பண்டிதராஜர் நிகழும் தைமாதத்தொடக்கத்தில் ஆசாரியன் திருவடிசார்ந்தாரென்பது உலகமறிந்ததே. இது பண்டிதவுலகுக்கு மிகவும் சோசநீயம். இவரோடு எனக்குத் தொடர்பு ஏற்பட்டு 52 வருஷமாகிறது. அஸ்மதாசார்ய பாதரான ஸ்ரீ ஜகத்குரு. காதி ஸ்வாமி தென்னாட்டுத் திருப்பதியாத்திரையாக (கஜதுரகபதாதிகளுடன்) எழுந்தருளின போது அடியேனும் விடைகொண்டிருந்தேன். அப்போது ஸ்ரீ ஸ்வாமி இரண்டு நாள் திருவையாற்றில் தங்கியிருக்க நேர்ந்தது. அக்காலத்தில் அவ்விடத்து ஸம்ஸ்க்ருதக்கல்லூரி விசேஷமையாயம் பொலிய நடந்து கொண்டிருந்தது. அவ்விடத்து ப்ரின்ஸிபால் ஸ்வாமி நம் காதிஸ்வாமி ஸன்னிதியில் வந்து "ஒரு வேளை கல்லூரியைக் கடாக்ஷிக்க எழுந்தருளவேணும்" என்று பிரார்த்தித்து வித்யாசாலையின் வைபவத்தை விவரித்துக்கூறினர். அவருடைய பிரார்த்தனைக்கிணங்கி அவசியம் வருகிறேனென்று வாக்களித்து "உபாத்யாயர்களெல்லாரும் தம் தம் வகுப்புகளில் வித்யார்த்திகளுக்குப் பாடப்ரவசனம் செய்து கொண்டிருக்கையில் வந்து கேட்கவேணுமென்று விரும்புகிறேன்; அப்படி ஏற்பாடு செய்துவிட்டு வந்து தெரிவிக்கவேணு"மென்று ஸாதித்தார் காதிஸ்வாமி. ப்ரின்ஸிபால் உடனே கல்லூரிக்குச் சென்று அவ்வண்ணமாகவே ஏற்பாடு செய்து விட்டு ஸ்ரீ காதிஸ்வாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றார். ஸ்ரீ ஸ்வாமி ஒவ்வொரு வகுப்பிலும் கால்மணிகாலம் எழுந்தருளியிருந்து அவரவர்களின் பாடப்ரவசனங்களைக் கேட்டருளினது ஏறக்குறைய மூன்றுமணி காலமிருக்கும். ஸ்ரீ ஸ்வாமி ஸந்தோஷம் என்று

சொல்லிப் புறப்படவிருக்கையில் ப்ரின்ஸிபால் ஸ்வாமி "வெறுமனே யெழுந்தருளி விடக்கூடாது; அவரவர்களின் பாடப்ரவசனங்களைக் கேட்டருளியவற்றில் திருவுள்ளத்தில்பட்ட குணதோஷங்களைச் சிறிது எடுத்துரைத்தால் அவரவர்கள் தங்களைத்திருத்திக் கொள்ள ஸௌகரியமாயிருக்கும்" என்று விஞ்ஞாபித்துப் பெரிய ஸபைகூட்டி ஸ்வாமியை ஆஸனத்தில் வீற்றிருக்கச் செய்தார். அப்போது அங்கு நம் D.T. தாதாசாரியரும் ஓர் உபாத்யாயராயிருந்து வந்தார். இவர் மீமாம்ஸாப்ரகரணக்ரந்த மொன்றின் ப்ரவசனம் செய்து கொண்டிருந்ததாக ஞாபகம். இவருடைய ப்ரவசன பத்ததியைப்பற்றி ஸ்ரீ காதிஸ்வாமி ப்ரஸ்தாவிக்கையில் "வித்யார்த்திகளின் க்ரஹணதாரண சக்தியின் அளவை நெஞ்சிற்கொள்ளாமலே தன்னுடைய வைதுஷ்யத்தைக் காட்டுவதற்கென்றே அநவஸரமான விஷயங்களை மூலத்திற்கு ஸம்பந்தப்படாமல் இழுத்துப்போட்டுக்கொண்டு ப்ரவசனம் செய்பவராக நம் தாதாசாரியரைக்குறிப்பிட்டருளினர். அதுகேட்ட ப்ரின்ஸிபால் ஸ்வாமி "தினப்படியாக இப்படியிராது; இன்று ஸ்ரீ ஸ்வாமி எழுந்தருளித் திருச்செவிசாத்தின படியால் தங்களுக்குள்ள சரக்கைக் காட்டிக்கொள்ள விரும்புவது ஸஹஜந்தானே" என்றார். அதுகேட்ட தாதாசாரியர் புன்முறுவல் பூத்துநின்றார். அந்தப்ரகரணத்தில் ஸ்ரீ காதிஸ்வாமி தாம் கேட்டருளின ப்ரவசன விஷயங்களையே பரிஷ்கரித்துக் காட்டும் முறையில் நீண்டதோர் உபந்யாஸம் செய்தருளி அங்கிருந்த ப்ரவக்தாக்களையும் வித்யார்த்திகளையும் மற்றும் திரண்டிருந்த பண்டிதர்களையும் ஹர்ஷப்ரகர்ஷபரவசராக்கியருளினர். அப்போது அனைவரும் ஸ்ரீ காதி ஸ்வாமியின் ஸர்வதோமுகமான பாண்டித்யத்தையும் வாக்மித்வத்தையும் புகழ்ந்து பேசினர். இது நிற்க.

அப்போது தாதாசாரியர் என்னோடு அதிகமான நட்புக்கொண்டார். அது முதலாக இருவோமுக்கும் அடிக்கடி பத்ரவ்யவஹாரங்கள் ப்ராரம்பமாகி வளர்ந்து வந்தன. உத்யாந பத்ரிகை யென்று ஸம்ஸ்க்ருத பத்ரிகையொன்று நடத்தத் தொடங்கினார் அவர். நான் (ஸ்ரீ காதி ஸ்வாமி நியமனத்தினால்) மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக் கொண்டிருக்கிறேன். உத்யாந பத்ரிகைக்கு நான் வியாஸங்கள் எழுதியனுப்புவதும், மஞ்ஜுபாஷிணீ பத்ரிகைக்கு அவர் வியாஸங்கள் எழுதியனுப்புவதுமாக நிகழ்ந்து வருகையில் இருவருடைய நட்பும் வளர்ந்துவந்தது. இப்படி செல்லுகையில் ஒருஸமயம் அவர் "மல்லிநாதவ்யாக்யாயாம் பாடசோதநம்" என்று மகுடமிட்டு ஒரு வியாஸமெழுதி உத்யாந பத்ரிகையில் வெளியிட்டார். ரகுவம்சம் நான்காவது ஸர்க்கம் இரண்டாம் சுலோகத்தில் "பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயேக்நிரிவோத்தித:" என்றவிடத்து மல்லிநாத வியாக்கியானத்தில் "பூர்வேப்ப்ய: அதிகஸ்ஸந்தாப:" என்று அச்சிட்டிருப்பதாகவும், அது அநந்விதமாதலால் (பூர்வாப்யதிகஸ் ஸந்தாப:) என்று அதைத்திருத்த வேணுமென்பதாகவும் எழுதியிருந்தார். அதுகண்ட நான் "உதாஹரித்தபாடத்தில் எவ்விதமான தவறுமில்லை; வ்யஸ்தமான பாடத்திலும் ஸமஸ்தமான பாடத்திலும் பொருள் ஒன்றே; (பூர்வாப்யதிக:) என்று இவர் திருத்தும் பாடத்தில் (பூர்வேப்ய: அப்யதிக:) என்று தானே விக்ரஹிக்கவேண்டும்; ஆகவே இங்கு சோதனம் அஸ்தானே என்று நீண்டதோர் வியாஸமெழுதி மஞ்ஜுபாஷிணியில் வெளியிட்டேன். அதில் "இப்போதிவர் திருத்திக்காட்டுகிற பாடமும் சிலபதிப்புகளில் காணப்படுவதால் தாம் புதிதாகத்

திருத்திக்காட்டுவதாக..........." இத்யாதிகளும் எழுதியிருந்தேன். அதிலிருந்து இருவோமுக்கும் மனவேறுபாடு விளைந்தது. ப்ரஸ்தாவித்த விஷயத்தில் அவர் ஒன்றும் பதிலெழுதாமல் என்னுடைய இதரக்ரந்தங்களில் குற்றங்குறைகள் கண்டுபிடித்து வெளியிட முயன்று, தமக்கு ஸதீர்த்த்யராய்த் திருக்குடந்தையில் வாழ்ந்த சைலிபாட்டராசாரிய ரென்பவரைத் தூண்டி அவர் முகமாகச் சில தூஷண நூல்களை வெளியிடுவித்துப் பலவகையான விவாதங்களை வளர்த்துவிட்டார். அதே ஸமயத்தில் திருக்குடந்தை வைதிகர்களோடு வேதலக்ஷணவிசார விஷயமான வாதவிவாத க்ரந்தப் பிரசுரங்களும் வலுத்தன. அதிலும் இந்த தாதாசாரியர் தலையிட்டு [வேதாத்யயனத்தில் தமக்கும் அந்வயமிருப்பதுபோல் காட்டி] சில சுவடிகளை எழுதியும் எழுதுவித்தும் திருவையாற்றில் தொடங்கின நட்பு திருப்பதியில் ப்ரபலப்ரத்வேஷமாய் முடிந்து நின்றது. அந்த ஸமயங்களில் அடியேன் ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை நடத்தத் தொடங்கவில்லையாதலாலும், நடந்து கொண்டிருந்த மஞ்ஜுபாஷிணி பத்ரிகையும் நின்றுபோனமையாலும், அம்ருதலஹரீ பத்ரிகை ஆரம்பித்து அதன் மூலமாகவும், தனித்தனிச் சிறு புத்தகங்கள் மூலமாகவும் ஒன்றையும் விடாமல் மறுத்தொழித்து வந்ததை உலகமறியும்; பண்டிதர்களாயுள்ளவர்களில் ஒருவரும் மறந்திரார். அப்போது விவாதச் சுவடிகள் அச்சிட்ட வகையில் எனக்கு பதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் செலவாயிற்றென்பது அத்யுக்தியன்று. இவர்க்குமெனக்கும் எத்தனை விஷயங்களில் வாதவிவாதங்கள் விளைந்தனவென்பதை ஆராயப்புகுந்தால் நூற்றுக்கணக்கில்தான்தேறும். உத்யான பத்ரிகையில் கீர்த்திமூர்த்தியான ஸ்ரீகாஞ்சி பட்டப்பா தாதாசாரியர் ஸ்வாமியின் ஸுபாஷிதநீவி வியாக்கியானத்தையும், (முன்னம் அச்சிடப்படாதிருந்த) குவலயானந்த வியாக்கியானமொன்றையும் கணச: கணச: அச்சிடத்தொடங்கியிருந்தார்; அவற்றில் இவருடைய மருள்களை யெடுத்துக்காட்ட நேர்ந்து அதிலிருந்து பல நூல்கள் வளர்ந்துவிட்டன. ஸமீபகாலத்தில் இவர் தாம் வெளியிட்ட யதார்த்த ராமாநுஜன் 1, 2 என்கிற பிரசுரங்களில், ஆதியிலிருந்து தொடங்கின விவாத விஷயங்களைத்தாமே ப்ரஸ்தாவித்திருக்கின்றார். நெடுநாள் வரையில் இவர் ஸம்பிரதாய விஷயங்களில் தலையிடாமலேயிருந்தார். ஏறக்குறைய 25 வருஷங்களுக்குமுன் ந்ருஸிம்ஹப்ரியாபத்ரிகையில் ஸம்பிரதாயார்த்த விஷயசர்ச்சைகள் சில ஏற்பட்டன. ஈடுமுப்பத்தாறாயிரப்படியிலுள்ள சில அர்த்த விசேஷங்களை மறுக்கும் வகையில் அவை நிகழ்ந்தன. அப்போது அவற்றுக்கு நம்முடைய மறுப்பு நூல்கள் அடுத்தடுத்து வெளிவந்துகொண்டிருந்தன. அவற்றுக்கு விடையிறுக்க (மடத்தின் சார்பில்) இவர் கிளம்பி எழுதி வெளியிட்ட சுவடிகளுக்குத் தோன்றின மறுப்புகள் பலபல. "பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம" என்ற ச்ருதிவாக்யத்திற்கு நம்பிள்ளையருளிச் செய்த அர்த்தத்தை ஓரிடத்தில் நான் விவரித்திருந்தேன். அதை கீர்த்திமூர்த்தியான மஹர்ஷி வாஸுதேவர்சார்ய ஸ்வாமி ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் [தாம் ஸம்பாதகராக இருந்தபோது] மிகவும் ப்ரசம்ஸித்து எழுதியிருந்தார். அந்த ச்ருதிவாக்யம் ஈசாவாஸ்யோபநிஷத்தின் முடிவிலுள்ளது. அவ்விடத்து பாஷ்யத்தில் தேசிகன் இவ்வர்த்தத்தை ஸாதிக்கவில்லை என்கிற காரணத்தினால் நம்பிள்ளை ஆதரித்த அர்த்தத்தை தூஷிக்கத் தலைப்பட்டார்கள். யாரென்னில், மடத்து வித்வான்கள். அதைப்பற்றி அப்போது வாத

விவாதங்கள் வளர்ந்து சென்றன. அதிலும் இந்த தாதாசார்யர் தலையிட்டு ரஸபங்கமாகப் பலபல எழுதியிருந்தார். நம்பிள்ளை ஸாதித்த அர்த்தத்தை இவர்களின் ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த ஸாக்ஷாத் ஸ்வாமியும் தசோபநிஷத் பாஷ்யகாரரும் தங்கள் நூல்களில் ஆதரித்திருக்கிறார் என்பதை அடியேன் எடுத்துக் காட்டியும் கூட "அது பரபக்ஷாநுவாதமேயொழிய ஸ்வாபிமதமாக எழுதினதன்று" என்று முடித்தார் தாதாசார்யர். இதே ரீதியில் தான் ஒவ்வொரு விசாரமும் நிகழ்ந்தது.

இவர்க்கும் நமக்கும் நடந்த பல்வேறு சர்ச்சைகளில் முக்கியமானதும், நெடுநாள் தொடர்ந்து நடந்ததுமான சர்ச்சையைக் கேளீர். 'தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னவளியை ஸாதித்தது பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியை பரிபூர்த்தியாக அநுஸரித்தே என்று அடியேன் நிரூபிக்கத் தொடங்கியது 35 வருடங்களுக்கு முன்பாக. இது 'அம்ருதலஹரி'யில் தொடங்கின விஷயம். அதை யிவர் பலகால் கண்டிக்க முன்வந்தார். இதில் என்ன முடிவாயிற்றென்பதை உபயஸம்ப்ரதாயத்திலுமுள்ள ரஸிக வித்வான்கள் தெரிந்துகொண்டேயிருக்கிறார்கள்.

கடைசியாக க்ருதஜ்ஞதையோடு ஒன்று தெரிவிக்கிறேன். தேசிகன் ஸச்சரித்ர ரக்ஷையில் "மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதே நலே" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தையெடுத்து செய்தருளின விமர்சத்தில் அஹிர்புத்ந்ய விச்வே தேவாதி சப்தங்களில் அலுக்ஸமாஸம் அநுசாஸனஸித்தமென்று எழுதிவைத்திருக்கிறார். அதை ஸுதீவிலோசனகாரர் கண்டித்திருக்கிறார். "இப்படிச் சில மந்தர்கள் எழுதிவைத்திருக்கிறார்கள்" என்றும் தூஷணை செய்திருக்கிறார். வேதலக்ஷண விஷயமாக நாம் எழுதிய நூல்கள் ஒன்றில் இதை ப்ராஸங்கிகமாக எடுத்துக் காட்ட நேர்ந்தது. அப்போது அஹோபிலமட ஆஸ்தான' வித்வானாக இருந்த [கீர்த்திசேஷரான] புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி கண்டிக்க எழுந்தார். ஸச்சரித்ரரக்ஷையில் ஸாதித்ததில் தவறில்லையென்று ஸாதிக்க முயன்றார். அப்போது இந்த தாதாசார்யர் திருவையாற்றில் இருந்ததாக ஞாபகம். இவரும் இவரோடு கூடவே அவ்விடத்தில் வ்யாகரணோபாத்யாயராயிருந்த வேரியநல்லூர் ஸ்ரீநிவாஸ தாதாசார்யரும் கூடி உத்யாந பத்ரிகையில் வெளியிட்ட வியாஸம் மேலே ப்ரஸ்தாவித்த புத்தங்கோட்டம் ஸ்வாமியின் வ்யாஸத்தைக் கண்டித்தது. அர்த்தாத், என்னுடைய வியாஸத்தை ஸ்தாபித்தது. ஸ்ரீமுக வருஷத்தில் அடியேன் வெளியிட்டிருக்கிற ரக்ஷாவிலோசனபாவப்ரகாசிகா என்கிற ஸம்ஸ்க்ருத நூலில் அந்த வ்யாஸம் பூர்த்தியாக வெளியிடப்பட்டிருக்கிறது. விச்வேதேவ சப்தத்தில் அலுக்ஸமாஸம் கொள்வது தவறு என்று முடித்திருக்கிறார். அந்த காலத்தில் இவர்க்கு கலாவைஷம்யம் இல்லாமலிருந்தது. அதற்காக புத்தங்கோட்டம்ஸ்வாமி "நம்மவர்களே நமக்கு விரோதிபானால் என் செய்வது!" என்று பரிதபித்துநின்றார்.

இப்படிப்பட்ட பலபல விஷயங்களை பண்ணியுரைக்குங்கால் பாரதமாம். ஸமீபத்தில் வெளிவந்த ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையில் இந்த தாதாசார்யரைப் பற்றி எழுதியிருப்பதையும் உலகம் கண்டிருக்கும். பொதுவாக ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஒரு சிறந்த வித்வான் மறைந்தார் என்பதுபற்றி நாம் பரிதாபம் காட்டுகிறோம்.

இரண்டு வருடங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கநாதபாதுகா பத்ரிகையில் வெளிவந்திருந்த சில வியாஸங்களை விமர்சிக்கப்புகுந்த அடியேன் ஸ்ரீராமாநுஜனில் சில தத்துவங்களை விளக்கியிருந்தேன். ஆறு மாதங்கள் பொறுத்து அதற்கு மறுப்பென்று இவரால் எழுதப்பட்ட கட்டுரை பாதுகையிலேயே வெளிவந்தது. அன்றே அப்போதே அதிலுள்ள அஸம்பத்தங்களை விளக்கி ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டேன் அவ்வளவோடு அது சாந்தமாயிற்று.

வேதத்தில் நாம் பரிச்ரமப்பட்டுச் செய்த ஆராய்ச்சிகளை 1971 ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டபோது அவதாரிகையாகச் சில விஷயங்கள் எழுத நேர்ந்தது. அதைப்புரிந்துகொள்ளாத தாதாசாரியர் பரிஹாஸமாகச் சில வார்த்தைகளெழுதிப் பாதுகையில் வெளியிட்டார். அப்போதே நாம் ஸ்வரபேதஞ்ஜனமென்று ஒரு நூல் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் எழுதி ஸ்ரீராமாநுஜனிலும் வைதிகமநோஹராவிலும் வெளியிட்டிருந்தோம். சென்னை மேலமாம்பலம் சங்கரமடத்து வேதபாராயண ஸபையார் தாங்கள் வெளியிட்ட வ்ருஷாந்தமலரில் அதை அப்படியே எடுத்து வெளியிட்டதும் தவிர ஸபையில் கனபாடிகள் இருவர் "இதுவரையில் எந்த நாட்டிலும் எந்த வைதிக வித்வானும் அறியப்படாத விஷயங்களிவை" என்று மனமாரப் புகழ்ந்தனர். ஸ்ரீதாதாசாரியர் பரமபதித்த பிறகு இவற்றை வெளியிடுகிறேமென்று நினைக்கவேண்டா; ஒவ்வொரு விஷயமும் அந்தந்த ஸமய விசேஷங்களில் ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்து உலகங்கண்டதேயாகும். ஸ்தோத்ரபாஷ்ய ஸச்சரித்ரரக்ஷா தாத்பர்யசந்த்ரிகாதிகளில் தேசிகனால் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளையே தழுவிப் பல விஷயங்கள் ஸாதிக்கப்பட்டிருக்கின்றனவென்பதை நாம் பல கால் நிரூபித்திருந்தவற்றை மறுக்கப் புகுந்த தாதாசாரியர் நம்முடைய நிரூபணங்களைக் கல்வெட்டாக்கிவைத்தது அவர் உலகுக்குச் செய்த சாச்வதமான மஹோபகாரமென்று பல ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் நமக்கு எழுதி வருகிறார்கள். தேசிகன் தத்வடீகையில் மிகவும் அஸமஞ்ஜஸமாக எழுதிவைத்தாரென்றும், ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து கோயில் திறவுகோல்களை அபஹரித்து நிர்ப்பந்தத்தால் புண்டரவிபர்யயம் செய்வித்தார்களென்றும் எழுதி வெளியிட்டிருப்பதை ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி போல்வாரும் ஆமோதித்திருப்பது தான் ஆச்சரியமென்று கோயில் சதாபிஷேகம் ஸ்வாமி அடிக்கடி சொல்வதுண்டு. இத்தகைய விஷயங்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளியிட்டாய் விட்டது. ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

---

## பிரகடனம்.

நமது பத்ராதிப ஸ்வாமியின் எண்பத்திரண்டு திருநக்ஷத்திரபூர்த்தியான மீன விசாகோத்ஸவம் நாளது பங்குனி மீ முதல்தேதியிலிருந்து பத்தாந்தேதிவரை [14—3—73 to 23—3—73] மாமூல்படி திருமாளிகையில் நடைபெறும்.

—ஸ்ரீ ராமாநுஜன் நிர்வாஹி.

—:X:—

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பகவத்கீதாஸாரஸங்க்ரஹம்

1. ஸர்வேச்வரன் உபயவிபூதிநாதனென்று கொண்டாடப்படுகிறான். லீலா விபூதியும் நித்யவிபூதியுமாகிய மண்ணுலகும் விண்ணுலகும் உபய விபூதிகளெனப் படும். *அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்று (திருவிருத்தத்தில்) நம்மாழ்வாரும், *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்றவெம்பெருமான்* என்று (நாச்சியார் திருமொழியில்) ஆண்டாளும் எம்பெருமானுடைய உபயவிபூதி நிர்வாஹகத்வத்தைப் பற்றிப் பேசின பாசுரங்கள் அறியத்தக்கன. நித்யவிபூதிக்கு எதிராயிருக்கின்ற இந்த லீலாவிபூதியை மாஞானிகள் 'இருள் தருமாஞாலம்' என்று வழங்குகிறார்கள். இம்மண்ணுலகம் இருளே மலிந்ததென்று சொல்லப்படுகிறது. ஸூர்யன் சந்திரன் அக்னி முதலிய சுடர்ப்பொருள்களால் போக்கமுடியாத அகவிருள் [அஜ்ஞாநாந்தகாரம்] இங்கு இருளெனப்படுகிறது. "அந்தம் தம இவாஜ்ஞாநம்" என்று ஸ்ரீபராசரமஹர்ஷியும் சொல்லிவைத்தார்.

2. இப்படிப்பட்ட அகவிருளை அகற்றுவதற்காகப் பேரருளாளனான எம்பெருமான் *கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளான நாநா சாஸ்த்ரங்களை யுபகரித்தருளினான். அப்படி உபகரித்தவிடத்தில் ஸத்வாரகமாகப் பலநூல்களையும் அத்வாரகமாகச் சில நூல்களையும் இவ்வுலகில் அவதரிப்பித்தருளினன். வ்யாஸபராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளை த்வாரமாகக் கொண்டு அவர்கள் வாயிலாக வெளியிட்டவை ஸத்வாரகமெனப்படும். அப்படி யன்றிக்கே தானே ஸாக்ஷாத்தாக வெளியிட்டவை அத்வாரகமெனப்படும். இப்படிப்பட்ட அத்வாரக சாஸ்த்ரங்களுள் பகவத் கீதாசாஸ்த்ரமென்பது தலைசிறந்து விளங்குகிறது.

3. *வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம்* வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தமும், தர்மசாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்ம்ருதியும், மஹாபாரதத்திற்குள்ளே ஸ்ரீ கீதையும், புராணங்களுக்குள்ளே ஸ்ரீ விஷ்ணுபுராணமும் சிறந்தவை யென்று சொல்லிற்று. பஞ்சம வேதமாகப் புகழப் படுகின்ற மஹாபாரதத்தினுள்ளே கீதோபநிஷத்தென்று குலாவப்படுகின்ற பகவத்கீதையானது பெரும்பாலும் ஸகலமதஸ்தர்களாலும் உச்சிமேல்வைத்து மெச்சப்படுகின்றதென்பது உலகமறிந்தது. உபநிஷத்துக்களின் அரியபெரிய பொருள்களெல்லாம் இதுதன்னில் அடங்கிக் கிடக்கின்றமையால் எப்படிப்பட்ட பண்டிதர்களுக்கும் வியாக்கியானங்களின் உதவியின்றி இதன் பொருள் அறிய முடியாததாயிருக்கும். ஆனதுபற்றியே பலபல மஹான்களும் மஹாசார்யர்களும் மேதாவிகளும் இதற்கு அனேக வியாக்கியானங்கள் இயற்றியுள்ளார்கள். மூலத்தின்மேல் ப்ரதிபதவியாக்கியானமாகவும் பொழிப்புரையாகவும், கருத்துரையாகவும், உபந்யாஸ ரூபமாகவும், ஆராய்ச்சி யுருவமாகவும் மற்றும்

பலவிதமாகவும் கீதைக்கு அமைந்திருக்கின்ற விவரணங்கள் எண்ணுதற்கரியன. இவை இரண்டொரு பாஷைகளிலல்ல; ஐந்தாறு பாஷைகளிலுமல்ல; உலகில் எத்தனை பாஷைகள் நடையாடுகின்றனவோ, அத்தனை பாஷைகளிலும் தோன்றியுள்ளன. இது கொண்டே இதன் ஒப்புயர்வற்ற மஹிமை அறியற்பாலது.

4. எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்திருந்தாலும் 'மதத்ரய பாஷ்யம்' என்று ப்ரஸித்தமாக வழங்கப்பட்டு வருகின்ற மூன்று பாஷ்யங்களே வைதிகவுலகில் அதிகமான ப்ரஸித்தியை யடைந்திருக்கின்றன. வட இந்தியாவில் வல்லபமதத்திற்கு அதிகப்ரசாரம் காண்பதனால் ஆங்கே வல்லபாசார்ய வியாக்கியானமும் சிறந்ததாகக் குலாவப்படும். நமது நாட்டில் சங்கராசார்யரியற்றிய அத்வைதபரமான பாஷ்யமும், ஸ்வாமி யெம்பெருமானாரியற்றியருளின விசிஷ்டாத்வைதபரமான பாஷ்யமும், ஸ்ரீமத் ஆனந்த தீர்த்தரென்னும் மத்வாசார்யரியற்றிய த்வைத பரமான பாஷ்யமும் இவற்றுக்கு சிஷ்யகோடிகள் இயற்றிய டீகைகளும் ப்ரஸித்தி பெற்று விளங்குகின்றன. பகவத்ராமாநுஜர் அருளிச் செய்த பாஷ்யமும் அதற்கு வேதாந்த தேசிகனருளிய தாத்பர்யசந்த்ரிகை யென்னும் டீகையும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் மிகவுயர்ந்த ஸ்தானத்தை யலங்கரித்து வருகின்றன.

5. மதத்ரய பாஷ்யங்களென்று குலாவப்படுகின்ற மேலே குறித்த மூன்று பாஷ்யங்களும் ஸம்க்ஷேபமான முறையில் அவதரித்தவை யெனினும், மத்வாசார்ய பாஷ்யமானது மிகவும் ஸம்க்ஷிப்தமாகத் தோன்றியது. சங்கராசார்ய பாஷ்யமானது அதைவிட சிறிது விரிவாகத் தோன்றியது. பகவத் ராமாநுஜ பாஷ்யமானது ஆவச்யக விஷயங்களைச் சிறிதும் விடாமலும் அநாவச்யக விஷயங்களை அடியோடு ஏற்றுக்கொள்ளாமலும் பரம போக்யமான பத்ததியில் அவதரித்துள்ளது. உலகில் அவரவர்கள் தம்தம் ஸம்பிரதாய நூல்களைப் புகழப் பிறந்தவர்களாதலால் அதற்குச் சேர நாம் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை ப்ரசம்ஸிப்பதாகச் சிலர் நினைக்கவுங்கூடும். வஸ்து ஸ்திதியில், எந்த மதத்தைச் சேர்ந்தவரும் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தைக் கண்டு ஈடுபடுவதை நாம் காண்கிறோம். மூலத்திலுள்ள ஒரு பதத்திற்கும் அர்த்தம் செய்வதை விடாமலும் பொருத்தமான அந்வயக்ரமங்களையும் அர்த்தங்களையும் காட்டியும் அருளிச்செய்யப்பட்ட பாஷ்யம் இஃதொன்றே யென்று நாம் கூசாமல் கூறலாம். இது அபிமானத்தில் சொல்லப்படுகிற வார்த்தை யென்று பிறர் நினைத்தாலும் நினைத்திடுக. விவேகிகளான யாவருடைய மனமும் ஒருங்கே இசையக்கூடிய வார்த்தையே இது என்பது வஸ்துஸ்திதி.

6. ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் அவதாரிகையுண்டு. ஆனால் அந்த அவதாரிகையானது பெரும்பாலும் வியாக்கியானகாரர்களால் விவரிக்கப்படும். அது மூலக்ரந்தத்தில் இல்லாமலிருக்கும். திருவாய்மொழிக்கு முதல் ச்ரிய:பதியென்றும் இரண்டாம் ச்ரிய:பதியென்றும் மூன்றும் ச்ரிய:பதியென்றும் அவதரித்துள்ள அவதாரிகைகள் வியாக்கியானகாரர்களினால் அமைக்கப்பட்டவையேயன்றி மூலமான திருவாய்மொழியில் அவதாரிகையாக ஓரக்ஷரமும் கிடையாது. கீதையில் அப்படியன்றிக்கே முதலத்யாயம் முழுதும் அவதாரிகையாகவே தோன்றியுள்ளது. 'இந்த நூல் எதற்காக அவதரிக்கின்றது' என்பதை விசதமாக நிரூபிப்பதுதானே

அவதாரிகை. அதனை நாம் பிறர் வாயினுல் தெரிந்துகொள்ள வேண்டாமல் கீதையைக் கொண்டே நன்கு தெரிந்து கொள்ளுகிறேமாதலால் இதற்கு அவதாரிகையும் இதிலேயே பொருந்தியிருக்கிறதென்று சொல்லத்தட்டில்லை.

7. கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதநனிடம் தூதுசென்று ஸமாதான வழிகள் பல பேசியும் "வீரபோக்யா வஸுந்தரா" ஆகையாலே போர்க்களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுமவர்களே ராஜ்யமாளக் கடவர்கள் என்று த்ருதராஷ்ட்ர வகுப்பினர் கூற, பிறகு யுத்தமே நடத்தக் கடவதாக முடிவு பெற்றது. இருவகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்தார்கள். துரியோதனன் கண்ணபிரானைத் துணையாக விரும்பவில்லை. *க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:* என்னும் புகழ் பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணைவனுக நிற்கவேண்டிற்று. பக்த பரதந்திரனை ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய பரமபக்தனை அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனுயிருந்துகொண்டு குருக்ஷேத்திரமென்னுமிடத்தில் வந்து போர் புரிய அணிவகுத்து நின்றனன். அப்பொழுது அர்ஜுனன் கண்ணபிரானைநோக்கி 'பெருமானே! இந்தப் போரில் யான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணைபுரிவதற்காக யார் யார் வந்திருக்கிறுர்களென்பதை நான் கண்டு தெரிந்து கொள்ளுமாறு தேரை இரண்டு சேனைகளினிடையில் நிறுத்த வேணும்' என்று கூற, அப்படியே கண்ணபிரான் இரண்டு படைகளினிடையே தேரை நிறுத்தி 'அர்ஜுநா! இவ்விரு படைகளிலுமிருக்கின்ற போர்வீரர்களைப் பாராய்' என்றனன்.

8. அப்போது அர்ஜுநன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்குமவர்கள் தந்தைகளாயும் புத்திரர்களாயும் பேரன்மார்களாயும் தோழன்மார்களாயு மிருப்பது கண்டு அவர்களிடத்து இரக்கங்கொண்ட மனத்தனுய் ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கி 'கண்ணு! போர்புரிய ஆயத்தர்களாயிரா நின்ற இந்த உற்றுருறவினரைக் காணவே எனது காண்டீவ தனுசு கையில் நின்றும் சோர்கின்றது; என்னுடல் எரிகின்றது; மயிர்க் கூச்செறிகின்றது; தேஹம் நடுங்குகின்றது; நான் நிற்கமாட்டேன்; என் மனம் குழம்புகின்றது; அபசகுனங்கள் காண்கின்றன; அமர்க்களத்தில் இவ்வுறவினர்களைக் கொன்று நான் என்ன நன்மையடையப் போகிறேன்? எனக்கு யுத்தமும் வேண்டா, யுத்தத்தில் வெற்றியும் வேண்டா; இராச்சியமும் வேண்டா, இன்பமும் வேண்டா; உற்றுருறவினர்களோடு கூடிக் களித்து வாழ்வதற்காகவன்றே பொருட்செல்வம் விரும்பப்படுகின்றது; அன்னவர்களனைவரும் உடலையும் உயிரையும் செல்வத்தையும் பொருள்படுத்தாது போர்புரிய வந்து நிற்கின்றனரே. அவர்களை வென்று கொன்ற பின்பு இந்த ராஜ்யத்தினுலுண்டாகு மின்பம் யாதோ? பிறகு நான் பிழைத்திருந்துதான் என்ன பயன்? மூவுலகவின்பமும் கிடைப்பதா யிருந்தாலும் நான் இவர்களைக் கொல்லமாட்டேன். இந்த அற்ப பூமிக்காக இவர்களைக் கொல்ல நினைப்பதும் ஏலாதது. நெருப்பிட்டுக் கொல்பவர்கள், விஷமிட்டுக் கொல்பவர்கள், பிறருடைய தனங்களையும் பூமியையும் மாதரையும் கொள்ளைகொள்பவர்களான ஆததாயிகளைக் கொலை செய்வதில் குற்றமில்லையாகையாலே அப்படிப்பட்டவர்களில் தலைவர்களான இத்துரியோதனுதியர் கொலை செய்யத் தகுந்தவர்

களேயாகுலும் இவர்களைக் கொல்ல நான் விரும்புகின்றிலேன். இந்த பந்துக்களைக் கொன்று நான் எப்படி ஸுகமடைவேன்? க்ருஷ்ணு! ராஜ்ய ஸுகங்களுக்காக உறவினரைக் கொல்வது பெரும்பாதகமல்லவோ? ஆகையால் அஸ்த்ர சஸ்த்ரங் களை நான் பிரயோகிக்கப் போகிறதில்லை. பிரயோகியாமல் வாளா நிற்கு மென்னைத் துரியோதனுதிகள் கொன்றபோதிலும் அதனுல் எனக்கு வருத்தமில்லை; அது எனக்கு க்ஷேமமேயாகும்—என்று கூறி வில்லைக் கீழே பொகட்டு வருத்தமும் கலக்கமும் மிகப் பெற்றுத் தேரிடையே உட்கார்ந்து விட்டான்; என்கிற விதுவே நாற்பத்தேழு சுலோகங்கள் கொண்ட முதலத்யாயத்தின் பிரமேயம்.

9. இப்படி அஸ்தாநே கலங்கின அர்ஜுனனுடைய கலக்கத்தைப் போக்கி அவனை யுத்தத்திலே மூட்டுவதற்காகக் கண்ணபிரான் இரண்டாமத்யாயத்திலிருந்து பல பல வுபதேசங்களைச் செய்தருள அவனும் தெளிவு பெற்று 'ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ' என்று சொல்லிப் போர் புரிய இசைந்தானென்பது கீதையின் முழுப்பொருள். இவ்விஷயத்தில் புத்திமான்கள் முக்கியமாக ஆலோசிக்கத் தக்கவை இரண்டு விஷயங்களுண்டு. யுத்தத்திற்குக் குதூஹலியாய்வந்து சேர்ந்த அர்ஜுனன் யுத்தாடம்பரம் செய்ய வேண்டியிருக்க அது செய்யாமல் தேர்ப்பாகனுயிராநின்ற தேவனை நோக்கி உபயஸைன்யங்களிலுமிருக்கிற பந்துக்களை இன்னுரின்னுரென்று பார்ப்பதற்காக இந்தத் தேரைச் சிறிது முன்னே கொண்டு போய் உபயஸேனைகளின் முன்னே நிறுத்து என்றுனே; இப்போது அர்ஜுனன் இப்படிச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. ஏற்கெனவே இவன் தெரிந்துகொள்ளாத அம்சம் என்ன இருக்கிறது? யுத்தத்தில் எதிரிகளாக வரப்போகிறவர்கள் அல்லது வந்திருக்கிறவர்கள் இன்னுரின்னுரென்பதை அர்ஜுனன் இதற்குமுன் தெரிந்துகொள்ளாமல் இனிமேலா தெரிந்து கொள்ளப்போகிறுன்; இல்லையே. அவர்களை யெல்லாம் வதைத்தொழிக்க வேணுமென்கிற ஊக்கங்கொண்டே போர்புரிய ஆயத்தனுய் வந்துநின்றவன் இப்போது இன்னுரின்னுர் போர்புரிய வந்திருக்கிறுர்களென்பதைக் கண்டறிந்து கொள்ளவேணு மென்றது சிறிதும் பொருத்தமாக இல்லையே. இது எப்படி பொருந்தும்? இது முதன்முதலாக ஆலோசிக்க வேண்டிய விஷயம். இனி மற்றொரு விஷயமாவது, யுத்தம் பண்ணமாட்டேனென்ற அர்ஜுநனை யுத்தஞ்செய்ய இசைவிக்க வேண்டியதுதானே கண்ணபிரானுக்குக் கர்த்தவ்யம்; அதற்கு இவ்வளவு விஸ்தாரமான கீதாசாஸ்த்ரம் வேணுமோ? 'அப்பா! நீ க்ஷத்ரியனுகையாலே யுத்தஞ்செய்யக் கடமைப்பட்டவனுகிறுய். என்கிறவிவ்வளவை உபபத்திகளுடன் சொன்னுற்போதும்; இதற்கு ஒரு அத்யாயமே அதிகம். அத்தனையத்யாயங்கள் வளர்த்தியிருப்பது எதற்காக? என்பது. ஆக இவ்விரண்டு விஷயங்களையும் ஆலோசித்துப் பொருத்தமான முடிவுகட்டவேண்டியது அவச்யமாயிருக்கின்றது.

10. மேலே ப்ரஸ்தாவித்த இரண்டு விஷயங்களுள் முந்தின விஷயத்திற்கு முன்னம் ஸமாதானம் தெரிவிக்கின்றோம். பகவான் ஸ்ரீ ராமாவதாரஞ்செய்து *தச வர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதாநிச, ராமோ ராஜ்யமுபாஸித்வா* என்றபடி பதினோராயிரமாண்டு இந்நிலவுலகில் வாழ்ந்திருந்தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்தமாக ஒரு சாஸ்த்ரமும் இட்டருளவில்லை; தன்னடிச் சோதிக்கு எழுந்தருளின

பிறகு திருவுள்ளத்தில் இக்குறை மிகவும் தோன்றிற்று. அப்போதே திடமாக ஸங்கல்பும் செய்து கொண்டான்—அடுத்தபடி மண்ணுலகில் அவதாரம் செய்யும்போது மிகச் சிறந்ததொரு சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தே தீருவேனென்று. சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தலென்றால் ஓலைப்புறத்திலே எழுதிவைப்பதன்று. அப்படியெழுதி வைப்பதில் ரஸமில்லை. ஒரு உத்தமாதிகாரிக்குத் தன் திருவாக்காலே நேராக உபதேசித்து அம்முகத்தாலே உலகில் பரவ வைக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தான்.

11. ஸ்ரீவசநபூஷணத்தில் "ஜிதேந்த்ரியரில் தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் *கேசவஸ்யாத்மாவென்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு" என்று பிள்ளை லோகாசார்யர் புகழும்படியான பெருமைவாய்ந்த அர்ஜுனனையே உபதேசஸத்பாத்ரமாகத் திருவுள்ளம்பற்றினான் கண்ணபிரான். அரும்பெரும் பொருள்களை சிஷ்யனானவனுக்கு உபதேசிக்கலாமே யல்லது மற்றையோர்க்கு உபதேசிக்கத் தகாது. அர்ஜுனன் இப்போது நண்பனென்னும் முறையிலுள்ளானேயன்றி சிஷ்யனென்னும் முறையிலில்லை. "அதிபரிசயாதவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி, மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே." என்று ஒரு ஸுபாஷிதமுண்டே. மலயபர்வதத்தில் வாழும் குறத்திகள் சந்தனக் கட்டைகளை விறகாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்களாம். எதனாலே? அவ்விடத்தில் சந்தனகாஷ்டங்கள் மலிந்துகிடக்கின்றன. அவற்றோடே அவர்களுக்குப் பரிசயம் அதிகம், அதிக பரிசயமுள்ளவிடத்தில் அவஜ்ஞை தோன்றுவது இயல்வு. ஆகவே அவர்கள் சந்தனக்கட்டைகளின் பெருமையை யுணராமல் அவற்றை யிட்டுச் சமையல் செய்வதும் குளிர்காய்வதுமாயிருக்கிறார்கள். அதுபோல, கண்ணன் பக்கலில் அதிக பரிசயமுள்ள அர்ஜுனனுக்கு சிஷ்யத்வமிருக்க ப்ரஸக்தியில்லையன்றோ. சிஷ்யவ்ருத்தி செய்யாதவனுக்கு உபதேசிக்கக் கூடாதாதலால் இவ்வர்ஜுனனை எப்படியாவது சிஷ்யனாக்கிக்கொண்டு இவனுக்கே கீதாசாஸ்த்ரத்தை யுபதேசிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றினான் கண்ணபிரான்.

12. "கண்ணபிரானே! உனக்கு நான் சிஷ்யனாயிருக்கின்றேன், எனக்குத் தத்வோபதேசம் செய்தருளவேணும்" என்று பிரார்த்திக்கும் படியாக அர்ஜுநனைச் செய்து பிறகு அவனுக்கு உபதேசிக்கவேணும். சிஷ்யத்வமென்பது எளிதாக உண்டாய்விடுமோ? "பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்... ...தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்..." இத்யாதியுபநிஷத்தின்படி நிர்வேதமுண்டானாலல்லது சிஷ்யத்வ முண்டாக மாட்டாதாகையாலே அர்ஜுனனுக்கு சிஷ்யத்வ ப்ராப்திக்கு அங்கமாக நிர்வேதமுண்டாகவேண்டியது அவசியமாயிற்று. அந்த நிர்வேதத்தை யுண்டாக்குவதற்கு ஸமயமெதிர்பார்த்திருக்கிறான் கண்ணபிரான்.

13. இப்பெருமான் ஸந்திபண்ணிவைப்பதாகப் புகுந்து, முடிவில் போர் செய்வதையே திடப்படுத்திக்கொண்டு, ஸமயத்தில் கீதாசாஸ்த்ரத்தையுபதேசிக்க இடம் பெறுவதற்காக அர்ஜுநனோடு ஸாமாநாதிகரண்யம் [சேர்த்தி] ஸித்திக்கும் பொருட்டு இவனுடைய தேரில் இருப்புப் பெறுவதற்குத் தேர்ப் பாகனாயிருக்க இசைந்து அவனோடும் அவனுடையாரோடுங்கூட குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்து,

யுத்தத்தைத் தொடங்குவதற்கு முன்னே பந்துக்களைக் கண்டு மோஹிப்பதென்ன: அதனால் சோக விஷாதங்களை யடைவதென்ன ஆகிய இவற்றை யுண்டாக்கி, ஆக இவ்வளவால் சிஷ்யத்வத்திற்கு அங்கமான நிர்வேதத்தை யுண்டாக்குவதாகத் திருவுள்ளம்பற்றி, மேலே பத்தாவது அத்யாயத்தில் *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே* என்று தானே யருளிச்செய்கிறபடியே தனக்கு அஸாதாரணமாக விருக்கும் சக்தியினால்-இப்போது போர்புரிய வந்து நிற்கும் உற்றுருறவினர்களைப் பார்க்கவேணு மென்பதோராசையை அர்ஜுனனுக்கு உண்டு பண்ணினுயிற்று

14. இரண்டாமத்யாயத்தில் பதினோராவது ச்லோகமாகிய "அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே, கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:" என்கிற ச்லோகந்தான் உபதேசத்தின் உபக்ரமமாக வுள்ளது. இதற்கு முன்னே அர்ஜுனன் வாயில் "சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று வெளிவந்திருக்கிறது. 'கண்ணா! எனக்கு தர்மாதர்மங்கள் தெரியவில்லை; எனக்கு ச்ரேயஸ்ஸென்று நீ அறுதியிட்ட பொருளை எனக்கு உரைப்பாயாக. உனக்கு நான் மித்திரன் மாத்திரமல்லேன்; சிஷ்யனுமாகிறேன்; இதோ உன் திருவடிகளில் வீழ்ந்து யாசிக்கிறேன் காண்; எனக்கு ஹிதாஹிதங்களை யுபதேசிப்பாயாக' என்று அர்ஜுநன் சொல்லும்படி செய்துவிட்டான் கண்ணபிரான். இந்த ப்ரார்த்தனையைப் பெறுமல் சிறந்த ச்சாஸ்த்ரத்தை யுபதேசிப்பது தகுதியன்றுதலாலும், நிர்வேத மில்லாதவனது வாயில் இந்த பிரார்த்தனை வெளிவராதாகையாலும் இத்தனையும் கண்ணபிரான் செய்துவைத்த வொரு நாடகம் என்பது அறியத்தக்கது. ஆகவே அர்ஜுனனுக்குண்டான வ்யாமோஹம் அவன் றன்னுடைய ஸ்வபாவத்தாலுண்டானதன்று, மாயப் போர்த் தேர்ப்பாகனுடைய மாயமந்திரம் செய்வித்த செயல் என்றதாயிற்று. இல்லையாகில் கீதாசாஸ்த்ரம் அவதரிக்க அவகாசமே யிராதன்றோ.

15. போர்புரிய மாட்டேனென்ற அர்ஜுனனைப் போரில் மூட்டுவதற்கு இந்த கீதாசாஸ்த்ரத்தில் சொல்லப்படுகிற விஷயங்களித்தனையும் வேணுமோ? க்ஷத்ரியதர்மோபதேச மொன்று போதுமே; ப்ரக்ருதத்திற்கு அநபேக்ஷிதங்களான அதிகவிஷயங்களை இதில் பரக்கக்கூறி யிருப்பது என்? என்கிற இரண்டாவதான ஆலோசனைக்கு இனிச் சொல்லுகிறோம். ஏதோ வொரு வியாஜத்தையிட்டு அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்களை வெளியிடவேணுமென்று துணிந்த கண்ணபிரானது திருவாக்கில் இது ஆவச்யகம், இது அநாவச்யகம் என்று வரையறுக்க நாமார்? விஷயங்களானவை ப்ரஸக்தம் அநுப்ரஸக்தம் என்று இருவகைப்படுமன்றோ? எந்த சாஸ்த்ரமும் ப்ரஸக்த விஷயங்களோடு மட்டும் நிற்காது. அநுப்ரஸக்த விஷயங்களும் சேர்ந்தே நிற்கும். ஸ்வாமி எம்பெருமானார் தம்முடைய கீதாபாஷ்ய அவதாரிகையின் முடிவில் "பாண்டுதநய யுத்தப்ரோத்ஸாஹநவ்யாஜேந பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷஸாதநதயா வேதாந்தோதிதம் ஸ்வவிஷயம் ஜ்ஞாநகர்மாநுக்ருஹீதம் பக்தியோகமவதாரயாமாஸ" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகளை இங்கே அநுஸந்திப்பது. அர்ஜுநனை யுத்தத்தில் உத்ஸாஹப்படுத்துவது என்பது வ்யாஜமாத்ரமென்றும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமாக வேதாந்தங்களில்

ஓதப்பட்டதாய் ஜ்ஞானகர்மங்களை அங்கமாக வுடைத்தாயிருந்துள்ள பக்தி யோகத்தை அவதரிப்பிப்பதுதான் இந்த கீதாசாஸ்த்ரத்திற்கு ப்ரதாந லக்ஷ்ய மென்றும் தெரிவித்தருளினாராயிற்று. ஆகவே முமுக்ஷுக்களுக்கு ஜ்ஞாதவ்யங்களான ஸகலார்த்த ஸாரங்களும் இந்த கீதாசாஸ்த்ரத்தில் தெள்ளமுதாக அமைந்துள்ளன வென்றதாயிற்று.

16. இந்த கீதா சாஸ்த்ரமானது அர்ஜுனனுக்கும் கண்ணபிரானுக்கும் ஸம்வாதரூபமாக அவதரித்திருக்கச்செய்தேயும் த்ருதராஷ்ட்ரனுக்கும் ஸஞ்ஜயனுக்கும் ஸம்வாதரூபமாகவும் அவதரித்ததாயிற்று. கீதை தொடங்கும்போதே "த்ருதராஷ்ட்ர உவாச" என்று அவன பெயரைத்தான் நினைக்கவும் சொல்லவும் ப்ராப்தமாகிறது. த்ருதராஷ்ட்ரன் ஸஞ்ஜயனை நோக்கிக் கேட்க, குருக்ஷேத்ரத்தில் நடந்த செய்திகளையெல்லாம் அவனுக்கு ஸஞ்ஜயன் சொல்லுவதாகவும், கீதாசாஸ்த்ரமும் ஸஞ்ஜயன் வாயிலாகவே வெளிவருவதாகவும் அமைந்திருக்கின்றது. பதினெட்டாமத்தியாயத்தில் எழுபத்து மூன்ருவது ச்லோகத்தோடு க்ருஷ்ணார்ஜுநஸம்வாதம் முடிந்து விட்டது. அதற்குமேலுள்ள ஐந்து ச்லோகங்களும் த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லி முடிப்பதாக அமைந்திருக்கின்றன.

17. பாண்டவர்களும் கௌரவர்களுமாகிற இருவகுப்பினருடையவும் சேனைகள் போர்புரிய ஆயத்தமாயிருந்த வளவில் வேதவ்யாஸ பகவான் தன் புதல்வனை த்ருதராஷ்ட்ரனிடம் வந்து 'மன்னவனே! இனி நடக்கப்போகிற யுத்தத்தில் உனது புத்திரர்கள் தவருது விநாசமடையப் போகிருர்கள்; அந்த யுத்தத்தை நீ நேரில் காண விரும்புகின்ருயாகில் அதைக் காண்பதற்கேற்ற சக்ஷுஸ்ஸை உனக்கு அளிப்பேன்' என்ருர். அதுகேட்ட த்ருதராஷ்ட்ரன் 'நான் அதைக் காண விரும்புகின்றிலேன்; உள்ளபடி அனைத்தையும் கேட்பிக்க வேணும்' என்ருன். அப்போது வேதவ்யாஸர் தம்முடைய சிஷ்யனும் த்ருதராஷ்ட்ர ஸாரதியுமான ஸஞ்ஜயனையழைத்து யுத்தவிஷயத்தில் அவன் ஸர்வஜ்ஞனும்படி அநுக்ரஹம் செய்து, 'ஆதியோடந்தமாக யுத்த விருத்தாந்தங்கள் முழுவதையும் த்ருதராஷ்ட்ரனுக்கு நீ சொல்லக்கடவாய்' என்று நியமித்து (வ்யாஸர்) தம் இருப்பிடம் சென்று சேர்ந்தார். பிறகு ஸஞ்ஜயன் யுத்தரங்கத்தில் வந்து, அர்ஜுநனுக்கு கீதோபதேசம் செய்தருளா நின்ற ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் முகாரவிந்தத்தில் நின்றும் கீதாம்ருதத்தை ஸாக்ஷாத்தாக ச்ரவணம் பண்ணி வியாஸருடைய அநுக்ரஹத்தினுல் கிடைத்திருந்த திவ்யஜ்ஞானத்தாலே விவித விசித்ர விருத்தாந்தங்களெல்லாவற்றையும் தனக்கோர் அபாயமின்றிக்கே கரதலாமலகமாகக் கண்டுணர்ந்து அந்த யுத்தரங்கத்தில் நின்றும்போய் த்ருதராஷ்ட்ரனிடம் சேர்ந்து, யுத்தத்தைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த அவனுக்கு யுத்தச்செய்திகளை முதலே பிடித்துச் சொன்னுன். ஆக இந்த ஸம்வாதம் கீதாசாஸ்த்ரமாக உலகில் பரவி அனைவரையும் புனிதமாக்கிக் கொண்டு வருகின்றது.

18. ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா வாஸ்தவமாகத் திருவவதாரம் செய்து, வாஸ்தவமான அர்த்தங்களை நிரப்பி வாஸ்தவமாக கீதாசாஸ்த்ரத்தை யவதரிப்பித்தருளினதாக ஸ்ரீ பகவத் ராமாநுஜனடியார்களான நாம் நம்பியிருக்கிருேம். ஸ்வாமியிட்டருளின கீதாபாஷ்யத்தின் அவதாரிகையிலும் மேலே பல ச்லோகங்களின்

பாஷ்யத்திலும் இந்த நம்பிக்கையே நமக்கு ஊர்ஜிதமாக்கப்படுகின்றது. ஸ்ரீமத் சங்கராசார்யஸ்வாமிகளியற்றிய பாஷ்யத்தின் ப்ரக்ரியை இதற்கு மாறாகவுள்ளது. அவர் தம்முடைய பாஷ்ய அவதாரிகையில் "பகவாந்...ஸ்வமாயயா தேஹவாநிவ ஜாத இவ ச லோகாநுக்ரஹம் குர்வந் லக்ஷ்யதே" என்றெழுதிவைத்திருக்கக் காண்கிறோம். இதனால், பகவான் உண்மையில் தேஹபரிக்ரஹம் செய்தருளவில்லையென்றும், உண்மையான அவதாரம் செய்தருளவில்லையென்றும், மாயையினால் ஏதோ ஜனங்களை மயக்கிக் காட்டினதாகவும் சங்கராசாரியர் அபிப்ராயப் படுவதாக விளங்குகின்றது. இப்படி இவர் அபிப்ராயப்படுவதற்கு ஒரு காரணாபாஸமுண்டு: அதாவதென்னென்னில்; மேலே நான்காமத்யாயத்திலே பகவான் தானே தன்னுடைய அவதாரத்தைப்பற்றிப் பேசிவருகையில் (4-6) "அஜோபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா." என்றதில் 'ஆத்ம மாயயா ஸம்பவாமி' என்றுள்ளது. இதற்கு உண்மையான பொருள் எதுவோ அது பகவத் ராமாநுஜ பாஷ்யத்தில் ப்ரமாண ப்ரதர்சந புரஸ்ஸரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. "ஆத்மமாயயா—ஆத்மீயயா மாயயா. 'மாயா வயுநம் ஜ்ஞானம்' இதி ஜ்ஞாநபர்யாயோத்ர மாயா சப்த:. ததா சாபியுக்தப்ரயோக:— 'மாயயா ஸததம் வேத்தி ப்ராணிநாஞ்ச சுபாசுபம்' இதி. ஆத்மீயேந ஜ்ஞாநேந ஆத்மஸங்கல்பேநேத்யர்த்த:." என்பன கீதாபாஷ்யத்தில் அங்கு ஸ்வாமியருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள். வைதிகநிகண்டுவையும் அதையநுஸரித்த அபியுக்த ப்ரயோகத்தையும் காட்டி ஸங்கல்பரூபஜ்ஞானமே இங்கு மாயாசப்தார்த்தமென்று ஸ்வாமி நிர்ணயித்திருக்கிறார். இதுதான் மஹர்ஷிகளின் அபிப்ராயத்திற்கு மிகவுமிணங்கிய ப்ராமாணிகமான பொருள். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (6-5-84) *இச்சாக்ருஹீதாபிமதோரு தேஹ:* என்று, மாயாசப்தஸ்தானத்தில் இச்சாசப்தத்தை நிஸ்ஸந்தேஹமாக இட்டு, பகவான் தன்னுடைய இச்சையினாலே தனக்கு அபிமதமான பல திவ்யமங்கல விக்ரஹங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு அவதரிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

19. இங்கு சங்கராசார்யர் "ஸம்பவாமி—தேஹவாநிவ பவாமி, ஜாத இவ. ஆத்மமாயயா—ஆத்மநோ மாயயா, ந பரமார்த்ததோ லோகவத்" என்று எழுதியுள்ளார். கானலானது தன்னிடத்தில் தண்ணீர் இல்லாமலிருக்கச் செய்தேயும் அது இருப்பதுபோல் காட்டுகிறதல்லவா? அப்படியே பகவானும் தான் உண்மையில் தேஹபரிக்ரஹம் பண்ணுதவனாகையாலே தன்னிடத்தில் தேஹமில்லாதிருக்கச் செய்தேயும் இருப்பதுபோல் மாயையினால் காட்டிக் கொண்டு நிற்கிறான் என்பது சங்கராசார்யருடைய அபிப்ராயம். மாயா என்னுஞ் சொல்லுக்கு பொய்யென்பதே இவர் கொண்ட பொருளாகும். அந்த நாலாவது அத்யாயத்திலேயே மேல் ஒன்பதாவது ச்லோகத்தில் "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்பதில் பகவான் தானே தன்னுடைய அவதாரத்தையும் அவதார சேஷ்டிதத்தையும் ஸத்யமாக எவன் அறிகிறானோ அவன் வர்த்தமாந தேஹத்தை விட்டொழித்து மறுபிறவியடையாமல் தன்னையே யடைவதாகச் சொல்லியிருக்கின்றான். 'மே ஜந்ம கர்ம ச ய: தத்வத: வேத்தி' என்றிருப்பதை ஸ்வமதப்ரதிகூலமாக நினைத்த சங்கராசார்யர் வெகு

சாதுர்யமாய் வேறுவிதமாக அந்வயம் காட்டியுள்ளார். தத்வத: என்பதை 'யோ வேத்தி' என்பதில் கூட்டாமல், தத்வத: 'தேஹம் த்யக்த்வா' என்று உத்தரார்த்திலே அந்வயித்துப் பொருளுரைத்தார். அவர் இவ்வளவு ச்ரமம் எதற்காகப் படுகிறாரென்றால், 'ஸம்பவாமி ஆத்மமாயயா' என்றுள்ள விடத்தில் மாயா சப்தத்திற்குத் தாம் கொண்ட பொருளே பொருளென்கிற வொரு அபிநிவேசத்தினால் தான்.

20. ப்ராமாணிகர்கள் இங்கு மத்யஸ்த நிலையில் நின்று ஒன்று குறிக்கொள்ள வேண்டும். தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் காடக ச்ருதியில் மூன்றும் ப்ரச்நத்தில் "யாவந்த: பாம்ஸவோ பூமே: ஸங்க்யாதா தேவமாயயா" என்று ஓதப்பட்டிருக்கின்றது. பூமியிலுள்ள மண்துகள்களெல்லாம் தேவர்களின் மாயையினால் கணக்கிடப் பெற்றவையாக இதில் சொல்லப்படுகிறது. இங்கு மாயையென்பதற்கு பிறர் கூறும் பொருள் பொருந்தமாட்டாதென்பது வெளிப்படை. பூமியிலுள்ள மண்துகள்கள் மனிதர்களின் ஞானத்தினால் கணக்கிட முடியாதவையாயினும் தேவர்களின் ஞானத்தினால் கணக்கிடக்கூடியவையே யாதலால் இங்கு 'தேவமாயயா' என்றதற்கு 'தேவர்களின் ஞானத்தாலே' என்பதுதான் பொருளென்று யாவரும் நிராக்ஷேபமாக இசையத்தக்கதாகும். வித்யாரண்யர் முதலான வேதபாஷ்யகாரர்களும் இப்படித்தான் இங்குப் பொருள் வரைந்துள்ளார்கள். ஆகவே (மாயா) என்பதற்கு 'மித்யா' என்று பொருள்கொள்வது பொருத்தமற்றதென்று தெளியக்கடவது.

21. அஸுரராக்ஷஸாதிகள் செய்கிற செயல்களை மாயை யென்று சொல்லுவதுண்டு. அங்கும் மித்யா என்கிற அர்த்தம் கிடையாது. ஆச்சர்யகரம் என்பது பற்றியே அங்கு மாயாசப்த ப்ரயோகம் பண்ணுவது. பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் அசித் ப்ரகரணத்தில் (10) "மாயையென்கிறது விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே" என்றருளிச் செய்தவிடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "அஸுரராக்ஷஸாதி க்ரியைகளை ஆச்சர்யகரத்வத்தைப் பற்ற மாயாசப்தத்தாலே சொல்லுகிறாப்போலே இத்தையும் [ப்ரக்ருதியையும்] மாயையென்கிறது விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே. அதாவது, ஒன்றுபோலொன்றன்றிக்கே விஸ்மயநீயங்களான கார்யங்களை ஜனிப்பிக்கை" என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம். "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" (7-14) என்ற கீதா ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்வாமி வெகு விசதமாக நிரூபித்தருளுகிறார். "அஸ்யா மாயாசப்தவாச்யத்வம் ஆஸுரராக்ஷஸாஸ்த்ராதீநாமிவ விசித்ரகார்யகரத்வேந.........அதோ மாயாசப்தோ ந மித்யார்த்தவாசீ. ஐந்த்ரஜாலிகாதிஷ்வபி கேநசிந்மந்த்ரௌஷதாதிநா மித்யார்த்த விஷயாயா: பாரமார்த்திக்யா ஏவ புத்தேருத்பாதகத்வேந மாயாவீதி ப்ரயோக:. ததா மந்த்ரௌஷதாதிரேவ ச தத்ர மாயா." இத்யாதி திவ்யஸூக்திகள் அங்கு ஸேவிக்கத்தக்கவை. மாயாசப்தத்தின் உண்மைப் பொருளையுணராதே தவறான பொருளைக் கொண்டதன் பயனாகவே மாயாவாதிகளின் வாதங்கள் மிகமிக வளர்ந்துவிட்டன.

22. கண்ணபிரான் அவதரித்ததும் பொய், தேஹபரிக்ரஹம் பண்ணினதும் பொய் என்று சொல்லும் பக்ஷத்தில் கீதாசாஸ்த்ரம் அவதரித்ததும் பொய்யென்றே சொன்னதாகத் தேறிவிடும். பொய்யான சாஸ்த்ரம் நம்முடைய உஜ்ஜீவனத்திற்கு

எப்படி ஸாதனமாகும். வேங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்சத்தில் வேதாந்தி வர்ணனத்தில் "த்ருச்யம் மித்யா த்ருஷ்டிகர்த்தா ச மித்யா தோஷோ மித்யேத்யேவ யா தீரமீஷாம்; ஸாதிஷ்ட்டர்நாம்சேபி கிம் நேதி சிந்தா ஸாதிஷ்ட்டாநாம் பண்டிதாநாமுதேதி." என்றொரு ச்லோகம் வெகு அற்புதமாகக் காண்கிறது. 'பார்க்கப்படுகிற பொருள்களெல்லாம் பொய், பார்க்கிறவனும் பொய், அவித்யையாகிற தோஷமும் பொய் என்று கொள்ளுகிற இந்த மாயாவாதிகள், இவற்றுக்கு ஆச்ரய பூதமான ப்ரஹ்மமும் பொய்யென்று முடித்திருக்கலாமே; ஏன் அதை மாத்திரம் ஸத்யமென்று கொண்டார்களோ தெரியவில்லை'—என்பதே இந்த ச்லோகத்தின் கருத்து. பொய்யன் சொல்லுகிற வார்த்தைகளும் பொய்யாகுமாகையாலே தம்மைப் பொய்யரென்று நிலைநாட்டிக் கொள்ளுகின்ற இந்த மாயாவாதிகள் சொல்லுமதெல்லாம் பொய்யே என்பது இவர்கள் தம்மாலேயே ஸ்தாபிக்கப்பட்டுத் தீருவதனால் இவர்களைக் கண்டிக்க நாம் சிறிதும் ப்ரயாஸம் கொள்ளவேண்டியதில்லையென்றும் ஒரு ரஸிக பண்டிதர் எழுதிவைத்திருக்கக் காண்கிறோம்.

23. கீதையின் இரண்டாமத்யாயத்தின் பன்னிரண்டாவது ச்லோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்ப மென்று சொல்லலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகையாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது ச்லோகம் எவ்விதமாகவுள்ளதென்று பார்க்கவேணும். "ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:, ந சைவ ந பவிஷ்யாமஸ்ஸர்வே வயமத: பரம்" என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன்கழிந்த அநாதிகாலத்திலும் இருந்தவனே; அர்ஜுநா! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமேயன்றிக்கே மேலுள்ளகாலமு மெல்லாம் நானும் நீங்களும் இருக்கப்போகிறவர்களே என்பதாம். ஸர்வேச்வரனாய் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான் தானே சோதிவாய்திறந்து பணித்துளன். இதனால் ஸர்வேச்வரனை பகவானிற் காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தமாகத் தெரிவித்ததாய்த் தேறுகிறது. இந்த ச்லோகம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாகவுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்யகாரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளியிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாகவுள்ளது.

24. கீழே அர்ஜுனன் (2-7.) "ப்ருச்சாமி த்வா தர்மஸம்மூடசேதா:, யச்ச்ரேயஸ்ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்." என்று, தத்வார்த்தம் தெரியாமையினாலே தான் தளும்பியிருப்பதாகவும் தன்னுடைய கலக்கம் தீர தத்வார்த்தத்தை அறுதியிட்டு அருளிச் செய்யவேணுமென்றும் சொல்லித் திருவடிகளில் விழுந்து யாசித்திருக்கிறான். அப்படிப்பட்டவனுக்கு தத்வோபதேசம் செய்யவே இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்தது. கீதாசார்யன், கலங்கினவனுக்குச் சொல்லும்போது தெளிவான பொருளைச் சொல்லுவனே யல்லது கலங்கின பொருளையே சொல்லமாட்டானன்றே. ஆகவே இந்த சாஸ்த்ரத்தில்

